ரூ. 3.50

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

திருவள்ளுவராண்டு 2037
ஆனி - சூன் 2006



குன்றக்குடி 9-6-2006 விசாக விழாவில்
மேதகு நீதியரசர் அரு. லெட்சுமணன்
'அறநெறி அண்ணல்' விருது பெறுதல்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :
*நிர்வாகி,*
**மக்கள் சிந்தனை**
குன்றக்குடி - 630 206
தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்
**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| திருவள்ளுவராண்டு 2037 (விய) | மாதம் : ஆனி |
| மலர் : 20 | இதழ் : 6 |




# உயிர்க்குல நேயமே உண்மையான ஆன்மிகம்!

"அனைத்து சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம்" என்ற உச்சநீதிமன்றத் தீர்ப்பினை நடைமுறைப்படுத்தும் வகையில் தமிழக அரசு ஆணை நிறைவேற்றி இருப்பது பெரும் பாராட்டுக்கு உரியது.

கடவுளின் பெயரால் மனிதர்களை இழிவுபடுத்தக் கூடாது என்று தந்தை பெரியார் கருவறை நுழைவுப் போராட்டத்தை அறிவிக்கின்றார். 1970 ஆம் ஆண்டு கலைஞர் தலைமையிலான அரசால், அனைவரும் அர்ச்சகர் ஆவதற்கு ஆன இந்து சமய அறநிலையப் பாதுகாப்பு (திருத்த) மசோதா கொண்டு வரப்பட்டுச் சட்டமன்றத்தில் நிறைவேறியது. மேலவையில் இந்த மசோதாவை விளக்கி நம் அருள்நெறித்தந்தை குருமகாசந்நிதானம் உரையாற்றினார்கள். ஆயினும் நீதிமன்றத்தின் வாயிலாக இச்சட்டத்தை நடைமுறைப்படுத்த முடியாத நிலை ஏற்பட்டது. இச்சட்டத்தை நடைமுறைப்படுத்த முடியாத நிலையை, "அறுவை சிகிச்சை வெற்றி பெற்றும் நோயாளி பிழைக்க வில்லை" என்று பெரியார் வேதனையோடு குறிப்பிட்டார்.

"எல்லோரும் இறைவனை - இறைவியைப் புனலும் பூவும் சொரிந்து வழிபடலாம்!" - இந்த நிலைப்பாடு தமிழகத்தில் ஏழாம் நூற்றாண்டில் நிலவி இருக்கின்றது என்பதை அப்பர் சுவாமிகள் பாடல் வாயிலாக அறியலாம்.

"மாதர்ப்பிறைக் கண்ணியானை
மலையான் மகளொடும் பாடி
போதொடு நீர்சுமந் தேந்திப்
புகுவார் அவர்பின் புகுவேன்"

என்று பாடுவார் அப்பரடிகள். ஒரு நீண்ட நெடிய வரிசை! திருக்கோயிலுக்கு வெளியே வரிசையாய் நின்று இறைவனை நீரும் மலரும் இட்டு வழிபடக் காத்திருந்து தாமே இறைவனை நீரும் மலரும் இட்டு வழிபாடு செய்திருக்கின்றனர். இடையில் இந்த வழிபாட்டு நெறிமுறை எப்பொழுது காணாமல் போனது?

வழிபாடு, உணர்வினை விடுத்துவிட்டு சடங்குகளையே முதன்மைப்படுத்தும் பொழுது கடவுளே காணாமல் போய்விடுகின்றார்! இன்று கடவுளை விடச் சடங்குகளையே கடவுளாக்கிக் கொண்டிருக்கின்றோம்! எறும்புகள் இறைவனைப் பூசித்திருக்கின்றன! எறும்புகள் இறைவனைப் பூசித்த தலம்தான் திருஎறும்பியூர். யானை இறைவனைப் பூசித்திருக்கின்றது! சிலந்தி இறைவனைப் பூசித்திருக்கின்றது. மனிதன்தான் இறைவனைப் பூசிக்க முடியாமல் மறுதலிக்கப்படுகின்றான்! கண்ணப்பர் - சிவகோசரியார் பூசையில் கண்ணப்பர் பூசைதான் இறைவனுக்கு இன்பத்தை, மகிழ்ச்சியை, உவப்பைத் தந்தது.

"அவனுடைய வடிவு எல்லாம் நம்பக்கல் அன்பென்றும் அவனுடைய அறிவு எல்லாம் நமையறியும் அறிவு என்றும்" என கண்ணப்பர் அன்புக்கு உதாரணமாகி விட்டார். கடவுளைப் போற்றுவதாகக் கூறுகின்றவர்கள் சிலர் மனிதர்களிடமிருந்து கடவுளைப் பிரித்து, மனிதர்களை இழிவுபடுத்துவதன் மூலம் கடவுளையும் கூடக் களங்கப்படுத்துகின்றனர். குறைவில்லா நிறைவாகிய, கோதில்லா அமுதாகிய, எல்லா உயிர்களுக்கும் தாயும் தந்தையுமாக இருக்கும், நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து அருளும் இறைவன் எல்லா உயிர்களையும் தன் குழந்தைகளாகப் பேணிக்காப்பார்!

உயிர்க்குல நேயமே
உண்மையான ஆன்மிகம்!

என்ற பாதையில் பயணம் செய்வோம்!

பொன்னம்பல அடிகள்

# குன்றக்குடியில் விசாக விழா! மேதகு நீதியரசர் டாக்டர். ஏஆர். லெட்சுமணன் அவர்களுக்குப் பாராட்டு!

"குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் விசாக விழா 9-6-2006 வெள்ளிக்கிழமையன்று வெகுசிறப்பாக நிகழ்ந்தது.

அன்று காலை 7.30 மணியளவில் திருக்கோயிலிருந்து அருள்தரு சண்முகநாதப் பெருமான் வெட்டி வேர்த் திருக்கோலத்துடன் ஆதீனத் திருமடத்துக் கொலு மண்டபத்திற்கு எழுந்தருளினார். சீர் வரிசையுடன் அழைத்து திருமடத்து முகப்பில் திருவருள் திரு குருமகாசந்நிதானம் அவர்கள் அருள்தரு சண்முகநாதப் பெருமானை வரவேற்றார். சண்முகநாதன் திருமடத்தில் கோயில் கொண்டுள்ள அருள்தரு காளத்திநாதர் சந்நிதிக்குச்சென்று பின் கொலு மண்டபத்திற்கு வேதபாராயணம், நாதசுர இசை, திருமுறை விண்ணப்பம் ஆகிய நிகழ்வுகளுடன் எழுந்தருளினார். பெருமானின் ஆறுதிருமுகங்களுக்கும் ஆறு கவிஞர்கள் ஆறுமுகப் பெருமானுக்கு வரவேற்புத் தமிழ்ப்பா மாலை சூட்டினர். பின் 11.30 மணியளவில் திருமுழுக்காட்டல் நிகழ்ந்தது. பெருமானுக்குப் பச்சை சாத்துபடி செய்யப் பெற்று தூப, தீப ஆராதனை சிறப்பு வழிபாடு நிகழ்ந்தது. மாலை 5.30 மணியளவில் வலங்கைமான் நாதசுர வித்துவான் திரு.எஸ்.ஏ.எஸ்.சந்திரசேகரன் குழுவினர், குன்றக்குடி நாதசுரவித்துவான் திரு.சோம.கந்தசாமி குழுவினர் ஆகியோரின் நாதசுர இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது.

மாலை 7.00 மணி அளவில் உச்சநீதி மன்ற நீதிபதி மேதகு நீதியர்சர் திருமிகு ஏஆர். லெட்சுமணன் அவர்களின் "நீதியின் குரல்" என்னும் நூல் அறிமுக விழாவும் ஆசிரியருக்குப் பாராட்டும் நிகழ்ந்தது. உயர் நீதிமன்ற நீதிபதி. மேதகு நீதியரசர் திருமிகு எம்.சொக்கலிங்கம் அவர்கள் நூல் அறிமுக உரையும் பாராட்டுரையும் வழங்கினார். திருவருள் திரு குருமகாசந்நிதானம் அவர்கள் மேதகு நீதியரசர் திருமிகு. ஏஆர்.லெட்சுமணன் அவர்களுக்கு "அறநெறி அண்ணல்" என்னும் விருது வழங்கி வாழ்த்திப் பேசினார்.

இரவு 11.30 மணி அளவில் வெள்ளி ரதத்தில் சுவாமி திருவீதி உலா நடைபெற்றது. விழா இனிதே நிறைவெய்தியது.

---

*டாக்டர் கே. பாலகிருஷ்ணன் அவர்களின் கட்டுரைத் தொடர் அடுத்து இதழில் தொடரும்.*

---

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

### 64. அமைச்சு

அங்கம் - உறுப்பு. அதாவது ஆட்சியின் உறுப்புகளாக நின்று துணை செய்வன. இவற்றுள் முதல் உறுப்பு அமைச்சு. ஆம்! ஆட்சிக்கு அமைச்சர்களே பொறிகளும் புலன்களுமாக நின்று நடத்துபவர்கள், சிறந்த அமைச்சினைப் பெற்ற நாடுகள் வளரும்.

*கருவியும் காலமும் செய்கையும் செய்யும்*
*அருவினையும் மாண்டது அமைச்சு.* (631)

ஆட்சியினுடைய பணிகளைச் செய்து முடிப்பதற்குரியனவாக வாய்த்திருக்கும் கருவிகள், பணி செய்தற்குரிய சூழல் அமைந்த காலம், மேற்கூறிய கருவிகாலம் முதலியன அறிந்து செய்யும் செயல், செய்யும் செயலின் அருமை ஆகிய மாட்சிமை அமைந்தது அமைச்சு.

கருவி : அறிவுக் கருவிகளாகிய சான்றோர்; செயற்கருவிகளாகிய புறக்கருவிகள்.

காலம் : உரிய காலம்; காலத்தால் முந்திச் செய்யினும் சில பணிகள் கெடும். காலத்தால் பிந்திச் செய்தல் பயன் தராது என்பது உறுதி.

செய்கையும் செய்யும் அருவினையும், கருவி, காலத்தோடு தொடர்புடையனவே.

*வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ(டு)*
*ஐந்துடன் மாண்டது அமைச்சு* (632)

வினை செய்வதில் வன்கண்மையும், குடிகளைக் காத்தலும் இவையிரண்டையும் முறையாகச் செய்தற்குரிய அறிவைப் பெறப் பல நூல்களைக் கற்றறிதலும் ஆள்வினையும் முற்குறளில் சொன்ன உறுப்புகள் ஐந்துடன் பெற்றது அமைச்சு.

"வன்கண்" - தனியே பிரிக்காமல் குடிமக்களைக் காத்தற் பணியில், சோர்விலாமலும் பிடிவாதமாக நிற்றலும் என்று பொருள் கொள்ளுதல் சிறப்பு.

"வன்கண்" - உள்ளுறுத்தல் உடைய வன்மையாளன் என்னும் பொருள் கொண்டு, ஒரோவழி வன்கண்மையுடைய குடிகள் இருப்பின் அவர்களையும் காத்தல் வேண்டுதல் என்று கொள்ளுவதிலும் தவறில்லை.

*பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்*
*பொருத்தலும் வல்லது அமைச்சு.* (633)

பகைவர்க்குத் துணையாயிருப்பாரைப் பிரித்தலும், தமக்குத் துணையாயிருப்பாரைத் தம்மைவிட்டுப் பிரிந்து போகாமல் பேணிக்காத்துக் கொள்ளலும், தம்மிடமிருந்து பிரிந்து சென்றாரை மீண்டும் வேண்டிப் பொருத்திக் கொள்ளலும் செய்யவல்லவனே அமைச்சன்.

"பிரித்தலும் பேணிக் கொளலும்" என்ற பகுதிக்குப் பகைவரிடமிருந்து பிரித்தெடுத்தோரை, திரும்பப் பகைவரிடம் போய் விடாதவாறு பேணிக்கொள்ள வேண்டும் என்று பொருள் கொள்ளுதல் நன்று. "பிரிந்தார்ப் பொருத்துதல்" - என்பதற்குப் பகைவரிடமிருந் தோரைத் தம்மிடம் கொண்டு வந்து சேர்த்துக் கொள்ளுதல் என்று கூறுவது சிறப்பு.

*தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்*
*சொல்லலும் வல்லது அமைச்சு..* (634)

ஒரு காரியத்தைப் பல்வகையாலும் ஆராய்ந்து அறிதலும், அறிந்து செயற்பாடுறுதலும் ஆராய்ந்து எடுத்த முடிவை ஒரே நிலையில் சொல்லுதலும் வல்லதே அமைச்சு.

அரசு செய்யும் ஒரு காரியம் என்பது நாட்டு மக்களின் வாழ்க்கைப் போக்கை நிர்ணயிப்பது. ஆதலால் அந்தக் காரியத்தைச் செய்யும் முன் அந்தக் காரியத்தைப் பல் வகையானும் - விளைவு - எதிர் விளைவுகளை ஆராய்ந்து அறிந்து கொள்வது அமைச்சின் பொறுப்பு. அங்ஙனம் ஆராய்ந்து தெளிந்த முடிவுகள் கூடச் செயற்பாடின்றேல் பயனில்லை.

அமைச்சர்கள் நினைத்தபடியெல்லாம் சொல்லாமல் ஒருதலையாக ஆராய்ந்து ஒருமுடிவாக எடுத்துச் சொல்ல வேண்டும்.

*அறன்அறிந்து ஆன்றுஅமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்*
*திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை..* (625)

அறநெறிகளை அறிந்து அனுபவத்தால் முதிர்ச்சிச் சொற்களைக் கூறும் அமைச்சன் என்றும், திறமைகளைத் தேர்ந்து தெளிவார்க்குத் துணை.

ஒருவருடைய திறமைகளைத் தேர்தலில் அறநெறிச் சார்பும் அனுபவ முதிர்ச்சியும் துணை செய்யும்.

அறநெறிச் சார்பை வலியுறுத்தியதால், சாதி, இனச் சார்புகள் வழிநின்று தேர்தல் செய்தல் கூடாது என்றவாறாயிற்று.

*மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்*
*யாவுள முன்நிற் பவை.* (636)

இயற்கையாய் அமைந்த நுண்ணறிவுடன் பலநூல்கள் கற்ற அறிவும் கூடிய அமைச்சர் முன் எத்தகைய அதிநுட்பச் சூழ்ச்சிகளும் முன்னிற்கா.

இயற்கையான நுண்ணறிவு, நூலறிவுடன் சேரும் பொழுதுதான் அறிவு உறுதிப்படுகிறது; செழிப்பாகிறது.

நூலறிவுச் சார்பு இல்லாத மதிநுட்பம் பயனுடையதன்று. அதுபோலவே மதிநுட்பச் சார்பிலாத நூலறிவும் பயனுடையதன்று.

முன்னையதால் ஒரோவழி பயன் உண்டு. பின்னையதால் பயன் காண்பரிது.

*செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து*
*இயற்கை அறிந்து செயல்.* (637)

நூலறிவின் வழி, செய்யும் திறன் அறிந்திருந்தாலும் உலகத்தியற்கை அறிந்து செய்க.

"உலகத்து இயற்கை அறிந்து செயல்" உலகத்தின் தட்ப வெப்பக் கோள்நிலைகள் அறிந்து செய்க என்று கொள்க.

உலக மாந்தர் வாழ்வியல் நிகழ்வின் அமைப்பு அறிந்து செய்க என்று கொள்ளவும் கூடும். ஆனால் உலக மாந்தரின் இயல்பறிந்து ஒத்துவராவிடில் செய்யாதொழிதல் கூடாது. உலகமாந்தரின் நடையறிந்து செய்யும் திறனில் மாற்றமும் வளர்ச்சியும் தேவை என்பதே கருத்து.

*அறிகொன்று அறியான் எனினும் உறுதி*
*உழைஇருந்தான் கூறல் கடன்.* (638)

அறியும் திறனறிந்தார் சொல்லிய அறிவைச் சொல்லப்படுபவன் அறியாது அழித்தானாயினும் அவனுக்குத் துணையாய் அமைந்த அமைச்சன் தொடர்ந்து உறுதிபயக்கும் அறிவுரைகளைக் கூறுதல் கடமை.

அமைச்சுத் தொழில், கடமையைச் சார்ந்த பணியாதலால் ஆள்பவர் ஏற்காது ஒழிதல் - ஏற்றும் ஒழுகாதிருத்தல் ஆகிய குற்றங்களைக் கண்டு வாளா ஓய்ந்துவிடாது அறிவுரை கூறுதல் வேண்டும் என்றது.

இந்த நெறி நட்பியலுக்கும் மனையறவியலுக்கும் பொருந்தும்.

அறிஞர் சொல்லும் அறிவுரையை உடனடியாக ஏற்காது அல்லது ஏற்று ஒழுகாது போவதற்கு ஆள்பவரின் திறமை, அவர்தம் சூழல் முதலியன தடையாக அமைந்திருக்கலாம். இவை நிலையானதல்ல. மாறவும் கூடும். அப்போது சொல்லிய அறிவு செயற்பாட்டுக்கு வரும் அல்லவா? அதனால் தொடர்ந்து கூறுக என்றார்.

"கடன்" ஆவன எல்லாம் பிறப்பின்வழி அமைந்தன என்று ஒருபோதும் மாறாது ஒழியாது செய்தற்குரியன.

*பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்*
*எழுபது கோடி உறும்.* (639)

பக்கத்தில் இருந்து கெடுதல் எண்ணுகின்ற அமைச்சர் ஒருவர், எழுபது கோடிப் பேர் செய்யும் தீமையிலும் மிகுதியாகச் செய்வார்.

கெடுதல் எண்ணும் ஒரு மந்திரி எழுபது கோடி பகைவரை உண்டாக்குவார் என்றும் கொள்ளலாம்.

*முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்*
*திறப்பாடு இலாஅ தவர்.* (640)

செய்யப்படும் வினைகளை முறையாக ஆராய்ந்தறிந்தும் செயல்திறன் இல்லாதவர்கள் அக்காரியங்களை முடிவிலா நிலையிலேயே செய்வர். அதாவது, காரியங்களைச் செய்வதில் தோல்விகளையே தழுவுவர்.

தொடங்கிய ஒன்றினை முடித்தலிலேயே ஆள்வினைத் திறன் இருக்கிறது.

முறைப்படச் சூழ்ந்தும் திறப்பாடில்லாதவர் முடிவிலவே செய்வர் என்றதால் ஆராய்ந்தறியும் அறிவுடைமையும் செய்யும் திறனும் ஒருங்கே அமைதல் வேண்டும் என்பதாயிற்று.

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.**சாமி. தியாகராசன்**)

பட்டத்தரசிக்கு மகன் இருந்தால் முடிபுனைவதற்கு உரிமை உடையவன் அவன்தான் என்பது உலகம் தழுவி உள்ள அரச குடும்பங்களின் நடைமுறை - ஒழுங்கு - மரபு. முடிசூட்டிக்கொள்ளப் பாத்தியதைப் பட்டவன் பட்டத்தரசியின் மகனா, முதல் மனைவியின் மகனா அல்லது அரசிகளின் புதல்வர்களில் மூத்தவனா என்ற கேள்விக்கு அரச நடைமுறைகளை அறிந்தவர்கள் விதிப்படிப் பட்டத்தரசியின் மகன்தான் அதற்குரியவன் என்பர். (பொதுவாக இளவரசு பட்டம் கட்டி அதற்குப் பின்பு உரிய காலம் வரும்போது அரசப் பட்டம் கட்டுவதுதான் வழக்கம். ஆனால் தசரதன் இராமனுக்கு இளவரசு பட்டம் கட்டாமல் நேரிடையாக அரசப் பட்டம் கட்ட முனைகிறான். ஏன்? பட்டத்தரசி கைகேயி மகன் இருக்கின்றான். அவனுக்குத்தான் முறைப்படி இளவரசுப் பட்டம் கட்டிப் பின்பு அரசனாக்க வேண்டும். அதனை விரும்பாத தசரதன் மூத்தவன் என்ற பெயரில் நேரிடையாக இராமனுக்கு முடிசூட்ட நினைக்கிறான். இதனைத்தான் கூனி கைகேயிடம் கூறும்போது இராமன் முடிபுனைவதற்கு இசைந்தனன் என்றால் கூட, அதற்கு அடுத்ததாக உள்ள இளவரசு பட்டத்தையாவது பரதனுக்குக் கொடுக்கலாம் அல்லவா? அதனையும் தராமல் பரதனை விலக்கி வைப்பது ஏன்? என்கின்றான். "மீத்தரும் செல்வம் பரதனை விலக்குமாறு எவனோ" என்னும் தொடர் இந்தப் பொருளையும் சுட்டி நிற்கின்றது. அயோத்தி அரசை ஏற்றுக்கொண்ட கையோடு பரதனுக்கு இளவரசு பட்டம் கட்டினான் இராமன் என்பது இவ்விடத்தில் எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்றாகும். இந்தச் சிக்கல் இருப்பதால்தான் தசரதன் யாருக்கும் இளவரசு பட்டம் கட்டவில்லை என்பது இங்கே நினைவு கூரத்தக்கதாகும்.)

பேரரசிக்கு ஒரு மகன் இருந்து அவன் கல்வி, கேள்வி, வீரம், விவேகம் ஆகியவை வாய்க்கப்பெறாமல் நல்ல குணங்களும் இல்லாமல் இருப்பானேயானால் அவனை அரியணையில் அமர்ந்த யோசிக்க வேண்டியிருக்கும். அப்படிப்பட்டவன் அல்லன் பரதன் என்பதைக் "கல்வியும் இளமையும் கணக்கில் ஆற்றலும் வல்வினை உரிமையும் அழகும் வீரமும் எல்லையில் குணங்களும் பரதற்கு எய்திய" என்று சுட்டிக்காட்டி எல்லாவிதத்திலும் பரதனே முடிபுனைவதற்கு உரியன் என்கிறாள் கூனி.

பட்டத்தரசியின் மகன் என்ற வகையில் பரதனுக்குக் கோசல நாட்டு ஆட்சி உரிமை பிறப்பு வழிவருகின்றது என்பது மேலே கண்டுவந்த விளக்கங்களால் தெளிவாகின்றது. இவற்றையெல்லாம் நன்குணர்ந்த இராமன் பரதனை நோக்கி இந்த ஆட்சி உன் பிறப்புரிமை ஆதலால் நீ தான் ஆளவேண்டும் என்கின்றான்.

சரி!

காட்டில் வைத்து இந்தப் பிறப்புரிமையைப் பேசும் இராமன் நாட்டில் இருக்கும்போது தசரதனிடம் இதனை எடுத்துக்கூறி மறுத்திருக்கலாமே! அவ்வாறு மறுத்திருந்தால் இந்தச் சங்கடங்கள் வராமல் போயிருக்குமே! ஏன் இராமன் அதனைச் செய்யவில்லை என்ற கேள்வி எழுவது முற்றிலும் நியாயமே! இந்தக் கேள்விக்குக் கம்பன் ஏதேனும் விடைவைத்துள்ளானா? பார்ப்போம்.

விடை வைத்துள்ளான் என்றே கருதவேண்டியுள்ளது. அரசாட்சியில் தனக்கு உரிமையில்லையேனும் "தந்தை சொல்மிக்க மந்திரமில்லை" என்னும் கோட்பாட்டைத் தன் தலைமேல் கொண்டவ னாகையால் தசரதன் கருத்துக்கு மாற்றுக் கருத்துச் சொல்லாமல் வாளா இருந்துவிட்டான் இராமன் என்கின்றான் கம்பன்.

வசிட்டன் மற்றும் அமைச்சர்களுடன் கலந்து ஆலோசித்து இராமனுக்கு முடிசூட்டுவது என முடிவு செய்து இராமனை அழைத்து வரச் சொல்லிய தசரதன் இராமனிடம் நீண்ட முன்னுரை சொல்லி பின்பு பெற்றோர் சொல்லை மறுக்காது ஏற்றுப் போற்றும் மக்களைப் பெற்றவர்களே துன்பத்தைத் துறந்தவராவர் என்று பேச்சை முடிக்கின்றான். அதன் பின்னர் "மிக்க துன்பம் தரும் அரச பாரத்தை தந்தை என் மீது சுமத்தினான் என மனத்தில் கொள்ளாமல் சிறந்த மகுடத்தைப் புனைந்து நல்லறம் காக்க நீ நினைக்கவேண்டும். இதுவே நான் கேட்டுப் பெறுவது" என்கின்றான்.

முடிபுனைக எனத் தந்தை மகனிடம் சொல்லும் கூற்றாகவும் அரசன் இடும் கட்டளையாகவும் இல்லாமல் இரண்டு நிலைகளையும் கலந்து (அதாவது தந்தையாகவும் - அரசனாகவும்) இந்த மகுடம் புனைந்து நல்லறம் புரக்க நீ ஒப்புக்கொள்ள வேண்டும். இதுவே நான் உன்னிடம் கேட்டுப் பெறுவது என்றும் - "தருதி இவ்வரம்" எனவும் சொல்லி முடிக்கின்றான் தசரதன்.

தந்தை இவ்வாறு சொல்லக் கேட்ட இராமன் என்ன செய்தான்?

"தாதை அப்பரிசு உரைசெய தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன் இகழ்ந்திலன் கடனிது என்றுணர்ந்தும்

யாது கொற்றவன் ஏவியது அதுசெயல் அன்றோ
நீதிஎற்குஎன நினைந்தும் அப்பணி தலைநின்றான்"

"தந்தை நிலையில் நின்று தசரதன் சொல்லியதை ஏற்பது மகன் கடமை என்றும், அரசன் நிலையில் நின்று தசரதன் இட்ட கட்டளையைச் செய்வது முறை என்றும் இவ்விரண்டும் நீதியின் பாற்பட்டது என்றும் நினைத்து இராமன் கீழ்ப்படிந்தான்" (ஒப்புக்கொண்டான்) என்கின்றான் கம்பன்.

இதனைத்தான் காட்டில் பரதனிடம்

"மன்னவன் இருக்கவேயும் 'மணிஅணி மகுடம் சூடுக'
என்னயான் இயைந்தது அன்னான் ஏயது மறுக்க அஞ்சி"

என்கின்றான் இராமன்.

நகர் நீங்கு படலத்தில் ஒரு காட்சி. பரதன் நாடாளவும் இராமன் காடாளவும் அரசன் கட்டளை இட்டுள்ளான் என்பதை அறிந்த இலக்குவன் மிகுந்த சீற்றம் கொண்டு இராமனிடம் "என் கண்ணுக்கெதிரே உனக்குத்தான் இந்த நாடு உரியது எனக் கொடுத்துப் பின்பு இல்லை இது உனக்கில்லை என்று சொன்னவன் மன்னனா" எனத் தசரதனை இழித்துப் பேசுகின்றான். அப்போது இராமன் "அரசாட்சியை ஏற்றுக்கொள்வது மிகுதியும் குற்றம் தரும் என்பதைப் பற்றி யோசிக்காமல் வெற்றியுடைய அரசன் "முடிகொள்க" எனச் சொல்லியவுடன் ஏற்றுக்கொண்டது என் குற்றமன்றோ! இதில் அரசன் குற்றம் எங்கே வந்தது?" என இலக்குவனைப் பார்த்துக் கேட்கிறான். பாட்டைப் பார்ப்போம்.

"பின் குற்றம் மன்னும் பயக்கும் அரசு என்றல் பேணேன்
முன்கொற்ற மன்னன் முடி கொள்க எனக் கொள்ள மூண்டது
என் குற்றம் அன்றோ? இதில் மன்னவன் குற்றம் யாதோ?
மின் குற்று ஒளிரும் வெயில் தீக்கொடு அணிந்த வேலோய்"

இந்தப் பாடலிலிருந்து ஒரு கருத்து நம் உள்ளத்தில் தோன்றுகின்றது. அரசன் முடிகொள்க எனச் சொல்லிய போது அய்யனே! தகப்பன் பேச்சைத் தட்டாதவன்தான் நான், ஆனால் ஆட்சி உரிமை என வரும்போது அதற்குரியவனாகப் பரதன் இருக்கின்றான். அவனும் இப்போது இங்கு இல்லை. அவனை அழைத்துப் பின்பு கலந்து பேசி முடிவு செய்வோம் என இராமன் சொல்லியிருக்க வேண்டும் என்பதுதான் அது. இந்த வகையில் இராமன் தன் தந்தையிடம் அப்போது கூறாமல் இப்போது இலக்குவனிடம் முடிசூட்டிக் கொள்ள ஒப்புக்கொண்டது தன் தவறுதான் எனச் சொல்வது நெஞ்சைக் கொஞ்சம் நெருடுகிறது.

(தொடரும்)

# மருந்தென வேண்டாவாம்

(மருத்துவர்.முனைவர். இரா. கலைக்கோவன்
திருமதி. கண்ணம்மாள்)

சென்ற ஆண்டின் தொடக்கத்தில் சென்னைப் போரூர் இராமச்சந்திரா மருத்துவமனையில் நிகழ்ந்த இதய மருத்துவர்கள் மாநாடு இந்தியர்களின் இதயம் குறித்துப் பெருங்கவலையை வெளிப்படுத்தி யுள்ளது. உலக நாடுகளில் அதிக அளவில் மாரடைப்பு ஏற்படும் நாடுகளுள் ஒன்றாக இந்தியா முன்னணியில் நிற்பது குறித்த இந்த ஆழ்ந்த கவலை மிகுந்த உன்னிப்பான ஆராய்வுக்குரியது. அறுபதுகளில் தமிழ்நாட்டில் மிகக் குறைந்த விழுக்காட்டில் இருந்த மாரடைப்புப் பெரும்பாலும் ஐம்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டோருக்கே ஏற்பட்டது. எழுபதுகளில் இந்த விழுக்காட்டில் முன்னேற்றம் காணப்பட்டதுடன், வயது வரம்பும் குறையத் தொடங்கியது. எண்பதுகளில் இதே நிலை நீடித்தது. ஆனால், கடந்த பத்தாண்டுகளில் வயது வரம்பு முப்பத் தைந்தாகக் குறைந்ததுடன், விழுக்காடும் பல மடங்காக உயர்ந்துவிட்டது.

இது குறித்து இந்திய இதய மருத்துவர்கள் சிலரும் உலக இதய மருத்துவர்கள் சிலரும் மிகுந்த கவலையுடன் ஆராயத் தொடங்கிய போதுதான் இந்தத் திடீர் விழுக்காட்டு உயர்வுக்கும் வயது வரம்பின் கீழிறக்கத்திற்குமான காரணங்கள் அறியப்பட்டன. இந்தியர்களின் மரபணுக்களிலேயே மாரடைப்பு வருவதற்கான கூறுகள் இருப்பதாகவும் இத்தகு மரபணுக்களைப் பெற்றவர்கள் உரிய எச்சரிக்கைகளை மேற்கொள்ளாவிடில் மாரடைப்பு ஏற்படுவது உறுதியென்பதுடன், வாழ்க்கைக்கே முடிவேற்படலாமென்றும் ஆய்வுக்கட்டுரைகள் எச்சரிக்கைக் குரலை எழுப்பியுள்ளன. மாரடைப்பை ஏற்படுத்தும் கூறுகள் மரபணுக்களில் இல்லாத இந்தியர்களும் மருத்துவர்கள் உரிய ஆய்வுகளுக்குப்பின் முறைப்படுத்தியிருக்கும் வழிகாட்டல்களை ஏற்காது போயின் மாரடைப்பிற்கு ஆளாகலாம் என்று இக்கட்டுரைகள் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

இரத்த ஓட்டத்தை இயக்கும் இதயத்தின் செயற்பாட்டிற்கும் இரத்தம் தேவை. இரத்தத்தை இதயத்திற்கு வழங்கும் மூன்று முக்கியமான இரத்தக் குழாய்களில் ஏதேனும் ஒன்றில்

அடைப்பேற்படுவதையும் அதன் விளைவாக அந்த இரத்தக் குழாய் வழி இரத்தம் பெறும் இதயத்தின் பகுதி இரத்தம் வராமையால் செயலிழந்து மரணிப்பதையுமே மாரடைப்பு என்கிறோம். இம்மாரடைப்பின் காரணமாக இதயத்தின் ஒரு பகுதி செயலற்றுப்போவதால், இரத்தத்தை உந்தித் தள்ளும் இதயத்தின் ஆற்றல் குறைந்து, பல்வேறு விதமான துன்பங்களுக்கு உடல் ஆளாகும் நிலை ஏற்படுகிறது. செயலிழக்கும் இதயத்தின் பகுதி அளவில் பெரிதானால் மரணம் ஏற்படலாம்.

இந்த மாரடைப்பை வராமல் தடுத்துக்கொள்ள வழிகள் உள்ளனவா? கடந்த பத்தாண்டுகளில் இதன் விழுக்காடு உயர்ந்ததற்கும் வயது வரம்பு தாழ்ந்ததற்கும் காரணங்கள் என்ன? மருத்துவ அறிஞர்கள் உலகளாவிய நிலையில் முனைப்பான ஆய்வுகள் மேற்கொண்டு தெளிவான வழிகாட்டல்களைத் தந்துள்ளனர். இந்த வழிகாட்டல்களுள் தலைமையிடம் வகிப்பது உணவுப் பழக்கம். அறுபதுகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை உயிர்க்கொல்லி நோயாக விளங்கிய மாரடைப்பு எழுபதுகளில் இறங்கத் தொடங்கி, எண்பதுகளில் மேலுமிறங்கித் தற்போது அவர்தம் புள்ளிவிவரக் கணக்குப்படி மிகமிகக் குறைவான விழுக்காட்டிலேயே காணப்படுகிறது.

இந்த மாற்றத்தை அமெரிக்கர்களால் எப்படிச் சாதிக்க முடிந்தது? "டீன் ஆர்னிஷ்" என்ற அமெரிக்க இதயநோய் மருத்துவர் அமெரிக்கர்களின் உணவுப் பழக்கங்களில் ஏற்பட்ட மிகப்பெரும் மாறுதலே இதற்குக் காரணம் என்று சுட்டுகிறார். இந்த மாறுதலைப் பெற அமெரிக்க மருத்துவக் கழகங்களும் உணவியல் அமைப்புகளும் பல நூறு கோடி டாலர்கள் செலவில் பல்லாண்டுகள் தொடராய்வுகள் நிகழ்த்தின. ஆய்வு முடிவுகளை மக்களிடையே கொண்டுபோய்ச் சேர்க்க மேலும் பல கோடி டாலர்கள் செலவழிக்கப்பட்டன. விளைவு, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இன்று மாரடைப்புப் பெரிதும் குறைந்துள்ளது.

இந்தியாவில் மாரடைப்பு பெருகியுள்ளது. அதற்கான காரணங்களும் தெளிவாகத் தெரிகின்றன. வழிகாட்டல்களும் வந்துள்ளன. இந்த வழிகாட்டல்கள் உலகளாவிய நாடுகள் முயன்று பலன்

கண்டவை என்பதால் உறுதியாய்ப் பின்பற்றத்தக்கவை. இந்த வழிகாட்டல்களுள் தலைமையிடம் பெறுபவை மக்கள் மேற்கொள்ள வேண்டிய உணவுப் பழக்கங்கள் ஆகும். எப்படி உண்பது, எவற்றை உண்பது, எப்போது உண்பது என்று உணவுத் தொடர்பான மூன்று கேள்விகளை அமைத்து, அவற்றிற்குரிய விடைகளை இந்த வழிகாட்டல்கள் வழங்குகின்றன. "எப்படி உண்பது?" என்ற முதற் கேள்விக்கு, "அளவறிந்து உண்க" என்பதே விடையாகத் தரப்பட்டுள்ளது. "அளவறிந்து உண்க", எனும் இந்த அறிவியல் கோட்பாடு எந்த அளவைக் குறிக்கிறது? உணவின் அளவையா? நம் தேவையின் அளவையா? உணவுப் பொருட்களின் சத்தளவையா? உணவின் அளவு, நம் தேவையின் அளவு, உணவுப் பொருட்களின் சத்தளவு எனும் இம்மூன்றுமே முக்கியமானவைதாம். "அளவறிந்து உண்க" என்பதில் உள்ள "அளவு" இம்மூன்றையும் ஒருங்கிணைந்தே சுட்டுகிறது என்பதை மறந்துவிடக்கூடாது.

மூன்று வேளை உணவைவிட ஆறுவேளை உணவு நல்லதென்கிறது அறிவியல். காலையில் பருகத் தேநீர், 8.30க்குச் சிற்றுண்டி, 11.00 மணியளவில் இளநீர் அல்லது சூப், மதியம் உணவு, மாலை 4.30 மணிக்குப் பழங்கள், 8.00 மணிக்கு இரவு உணவு. நம் தேவையின் அளவைப் பொறுத்தே இந்த ஆறு வேளைகளில் கொள்ளும் உணவின் அளவும் அமையும். அமர்ந்து வேலை செய்வோர்க்குச் சிறிதளவு உணவு போதும். உடல் உழைப்பாளிகளுக்குப் போதுமான அளவு உணவு வேண்டும். உழைப்பைப் பொறுத்தமையும் இந்தத் தேவையின் அளவைக் "கலோரி" என்கிறது மருத்துவம். ஆடவர், மகளிர், இளைஞர், வளரும் சிறார், குழந்தைகள் எனப் பால், வயதுக் கேற்பவும் உழைப்பிற்கேற்பவும் இந்தக் கலோரியின் அளவு மாறுபடும். உணவின் கொள் அளவும், உடலின் தேவையளவும் தெரிந்து, கொள்ள வேண்டிய உணவுகளை அவற்றின் சத்தளவு அறிந்து புசிக்க வேண்டும்.

சத்தற்ற உணவு கொள்வது சக்கையை உண்பதற்கொப்பாகும். நலவாழ்விற்கு அன்றாடத் தேவையான புரதம், மாவுச்சத்து, கொழுப்பு, வைட்டமின்கள், தாதுஉப்புக்கள் ஆகியவற்றை அவரவர் தேவையளவு அறிந்துகொள்வதே நலமான வாழ்விற்கு வழியாகும். பழங்கள், காய்கறிகள், கீரைகள் ஆகியவற்றை வேண்டுமளவு கொள்ளலாம். பருப்பு, தானிய வகைகளைத் தேவைக்கேற்ப கொள்ளலாம். கொழுப்புணவுகளான பால், பால்பொருட்கள், எண்ணெய், அசைவ

உணவுகள் ஆகியவற்றைத் தவிர்ப்பது நல்லது. தவிர்க்க முடியாதவர்கள் மிகக் குறைத்துண்பது நலம்.

கோடிக்கணக்கில் செவழித்து உலகெங்கிலுமுள்ள ஆய்வுக் கூடங்கள் நாளும் பொழுதும் போராடிக் கண்டறிந்த இன்றைய நலவாழ்வின் தாரக மந்திரமான, "அளவறிந்து உண்க" எனும் கொள்கை முழக்கம் நம் மண்ணில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே ஒரு பெரியவரால் அனுபவ நிலையில் கண்டறிந்து கூறப்பட்ட உண்மையாகும். "அற்றால் அளவறிந்து உண்க, அஃதுடம்பு பெற்றான் நெடிதுய்க்குமாறு" - இதைச் செய்யுள் என்று யாப்பமைதியால் கூறலாம். ஆனால், இதன் உள்ளீடு எத்தனை தீர்க்கதரிசனமான அறிவியல் கோட்பாடு என்று சிந்திக்கும்போது மெய்சிலிர்க்கிறது. உடம்பு பெற்றவன் அவ்வுடம்பு நெடிதுய்த்திருக்கச் செய்ய வேண்டுவது அளவறிந்து உண்பதே.

"அளவறிந்து உண்க" என்ற இச்சிந்தனையை முதல் வழிகாட்டலாக வள்ளுவர் தரவில்லை. அதனினும் இன்றியமையாத ஒரு கோட்பாட்டை, நவீன மருத்துவம் இன்றளவும் மக்கள் முன்வைக்காத அரிய அனுபவ உண்மையை உணவியல் குறித்த தம் முதல் அறிவுரையாகத் தருகிறார். உடலுக்கு மருந்தென்பதே வேண்டாம் என்பது வள்ளுவர் வழி. எப்போது இந்த இனிய நிலை கைகூடும் "அருந்தியது அற்றது போற்றி உணின்". இச்சொற்றொடரை உள்ளம், உடல் தொடர்பான இரண்டு அரிய உண்மைகளின் கூட்டுறவாய்ப் படைத்திருக்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

"அருந்தியது போற்றி உணின்", என்பது உள்ளம் தொடர்பான சிந்தனை. எதை உணவாய்க் கொள்கிறோமோ, அதைப் போற்றி உண்ணல் வேண்டும். "தினமும் இட்லிதானா?" என்று சலித்துக் கொள்வதைவிட, "நாளும் இட்லி கிடைக்கிறதே" என்று மகிழ்வதோடு "உளுந்திலுள்ள புரதமும் அரிசியிலுள்ள மாவுச்சத்தும் இவ்விரண்டிலுமுள்ள வைட்டமின்களும் தாது உப்புக்களும் நம்மை வலிமைப்படுத்த, நம் வாழ்வு நலவாழ்வாகச் சிறக்க, இட்லியாய் வடிவெடுத்து வந்துள்ளன" என்ற சத்தான எண்ணத்தோடு காலையுணவு ஏற்க வேண்டும்.

விருப்பமின்றி உண்ணும்போது, சரியான உணர்வுத் தூண்டல்கள் கிடைக்காமையால் செரிமான நீர்கள் தேவையான அளவில் சுரப்பதில்லை. அதனால், உண்ணும் உணவு அது எத்தனை எளிமையான உணவாக இருந்தாலும் முழுமையாகச் செரிக்கப்படாமல், அதன் சத்துக்கள் உடலைச் சேராதொழிவது ஒருபுறமும் குறைச்செரிமானத்தால் வயிற்றழற்சி ஒருபுறமும் எனத் தீங்குகளை விளைவிக்கிறது. "விருப்பத்தோடு உண்ணுதல்" உணவருந்துதலில் மிக முக்கியமான இடத்தை வகிக்கிறது. உண்ணுதலில் உணர்வுகள் வகிக்கும் இந்த ஆளுமையை நன்கறிந்தே வள்ளுவர், "அருந்துவது போற்றி உண்க" என்கிறார்.

உண்ட உணவு செரிப்பது மிக முக்கியமானது. இந்தச் செரிமானம் உணவைக் கொள்ளும் போதே தொடங்கிவிடுகிறது. வாய், இரைப்பை, சிறுகுடல் என உணவுப் பாதையின் பல இடங்களில் நிகழும் இந்தச் செரிமானம், கொள்ளும் உணவைப் பொறுத்துக் காலம் எடுத்துக் கொள்கிறது. ஏறத்தாழ மூன்று அல்லது நான்கு மணிநேரத்தில் செரிமானமாகும் உணவின் சத்துக்கள் குடலுறிஞ்சிகளால் ஏற்கப்பட்டு இரத்தத்தோடு கலந்து செல்களைச் சென்றடைகின்றன.

இந்தச் செரிமானத்தின் சிறப்பறிந்த வள்ளுவர், "ஒரு முறை உணவு உட்கொண்ட பிறகு அடுத்த உணவை எப்போது கொள்ளலாம்" என்ற கேள்விக்கு விடையிறுக்கும்போது, "முதலில் உண்ட உணவு செரித்த பிறகு" என்று மறுமொழிகிறார். இதைத்தான் அவரது "அற்றது போற்றி உணின்" சுட்டுகிறது. செரித்ததை அறிந்து உண்டால் உடலுக்கு மருந்து தேவையில்லை.

செரிமானம் நிறைவுற்றதை எப்படி அறிவது? உண்ட உணவைச் செரித்தனுப்பிய உணவுப்பாதை உறுப்புக்கள் அடுத்த உணவைக் கொள்ளத் தயாராகும் நிலையே, "பசியாக" உணர்த்தப்படுகிறது. "பசித்துப் புசி" என்ற சொற்றொடர் பொருள் பொதிந்தது. பசியின் காரணமாய் விளையும் உணர்வுத் தூண்டல்கள் செரிமான நீர்களைச் சுரக்கும் சுரப்பிகளை உற்சாகப்படுத்தி, அடுத்து வரும் உணவின் தேவைக்கேற்ப உரிய நீர்களைச் சுரக்குமாறு செயற்படுத்துகின்றன. "பசி" எனும் தேவை, உணவு செரிமானத்தின் முடிவில் படிப்படியாய் வளர்வது.

பசி எனும் தேவையின் தொடக்கத்திலேயே அடுத்த உணவைக் கொள்ளவேண்டியதில்லை. நன்கு பசித்தலும் தேவை தெளிவாக உணர்த்தப்பட்டதும் அடுத்த உணவை ஏற்றால் போதுமானது. இதை உலக அளவில் கோட்பாடாக முதலில் முன் வைத்தவர் நம் வள்ளுவப் பெருந்தகைதான். "துய்த்தல்" என்று குறித்துள்ளாரே அதை அந்த உளவியல் அறிஞர்தம் அறிவின் முத்தாய்ப்பெனலாம். துவரப் பசித்த பின் உண்பது மகிழ்வு தருவது, நலம் விளைவிப்பது என்றறிந்தமையால் தான் அப்படி உண்ணும் செயலைத் "துய்க்க" என்ற சொல் கொண்டு குறித்தார் வள்ளுவர். "துய்த்தல்" மிக மேன்மையான நுகர்வின்பத்தைக் குறிக்கும் ஆழமான, பொருளமைந்த தமிழ்ச்சொல். அதை உணவருந்துதலுக்கு வள்ளுவர் ஏன் தந்தார் என்பதைத் துவரப்பசித்து உண்பவர்கள் அனுபவத்தால் துய்த்தறிவர்.

(தொடரும்)

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

- ஆசிரியர்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "அடிகள் முன்னர் யான் அடி வீழ்ந்தேன்" - 9

(மு. பழனிஇராகுலதாசன்)

திருமடத்துப் பணியாளரின் குறிப்பு மொழிகளை விளக்கி முருகனிடம் சொல்லுவதற்கு நான் தயார்தான்; ஆனால் கேட்டுக்கொள்ள அவர் தயாராக இல்லை. "சரி, வாருங்கள் மாடிக்குப் போவோம், சாமியைப் பார்த்துவிடுவோம்" என்று நானும் துணிந்து சொல்லிவிட்டு மாடிப்படிகளில் விரைந்து ஏறினோம். உள்ளே நுழைந்ததும் எங்கள் கண்களில் பட்ட இனிய காட்சி, ஓர் ஓவியம் போல் இன்னும் அப்படியே நிழலாடுகிறது.

அதற்கு முன்பு அடிகளைத் தலைப்பாகை இல்லாமல் பார்த்ததில்லை. இப்போது தலைப்பாகை விரிந்து தோளில் நீண்டு கிடந்தது. ஜடையும் முடியுமாய்த் தோற்றிய தலைக்கோலம்! இதுவும் ஒரு தவக்கோலம்! ஒரு கையில் ஏதோ ஒரு காகிதம், இன்னொரு கையில் எவரெடி பெரிய டார்ச்சு விளக்கு. பணியாளர் சொன்னதுபோல் அடிகள் எதையோ தேடிக்கொண்டிருந்தது புலப்பட்டது. செவ்வி அறியாமல் வந்துவிட்டோமோ என்று என் நெஞ்சம் சிறிது பதறியது. உள் அறைக்குள் நுழைய முயன்ற அடிகள் எங்கள் அரவம் உணர்ந்து எங்கள் பக்கம் திரும்பினார்கள். பார்வை முழுதும் என்மீது கவிந்தது. என் அச்சம் மேலும் பெருகிவிட்டது. அடிகள் என்ன சொல்லப்போகிறார்களோ?

"யார், பழனியா?"
"ஆம் சாமி"

எனக்குள் பரவிக்கிடந்த அச்சம், தயக்கம் எல்லாம் மறைந்து ஓடிவிட்டன. தாயினும் சாலப்பரிந்து, எனைக்கருதி, எனை நோக்கி அழைத்த தேனினும் இனிய குரல்! இந்த மாதிரி நேரங்களில் என் இதயமும், இதய வாசல்களாம் கண்களும் நெகிழ்ந்துவிடும்! கண்களைத் துடைத்துக்

கொண்டு, அடிகளைத் தொடர்ந்து உள்ளே போனேன், முருகன் பின் தொடர்ந்து வந்தார்.

பாதங்கள் தொட்டு வணங்கினேன், திருநீறு இட்டவாறே "என்ன, இந்த நேரத்தில்?" என்று வினவினார்கள். முருகனை அறிமுகப்படுத்திச் சில வார்த்தைகள் சொன்னேன். இளைஞர்கள், மாணவர்கள் என்றால் அடிகளுக்கு உற்சாகம், ஆர்வம் பொங்கிப் பொலிந்து அலைபாய்ந்து விடும். "உங்கள் மாணவரா, ரொம்ப மகிழ்ச்சி" என்று திருவாய் மலர்ந்த அடிகள் முருகன் பக்கம் திரும்பி "வேறு என்ன செய்றீங்க" என்றார்கள்.

"கலை இலக்கியப் பெருமன்றத்திலே இருக்கிறேன்" என்றார் முருகன்.

"மன்றத்தில் இருப்பது சரி, அதில் இருந்து என்ன செய்றீங்க?" என்று அடிகள் மறுபடியும் வினா எழுப்பினார்கள்.

அடிகளின் விரைவுக்கும் வேகத்துக்கும் ஆனானப்பட்ட மேதாவிகளே ஈடுகொடுக்க முடியாமல் தடுமாறிப் போவார்கள். மாணவர் நிலையில் முருகன் என்ன செய்வார்? இருந்தாலும் ஒருவாறு தன்னை சரிப்படுத்திக்கொண்டு "எழுதுவது படைப்பது என்று இலக்கியப் பணிகள் செய்கிறேன்" என்றார்.

அடிகள் விடவில்லை. "எழுதி படைத்து இலக்கியப் பணி செய்தால் போதுமா? அதனால் என்ன பிரயோசனம்?" என்றார்கள்.

அடிகள் எதை நோக்கி உரையாடலை நகர்த்திக் கொண்டு போகிறார்கள் என்பதை நான் உணர்ந்தேன். நல்ல சந்தர்ப்பமாக முருகனும் உணர்ந்து கொண்டவராக, "எழுதினாலும், இலக்கியத்தினாலும் சமுதாயத்தில் மாற்றத்தைக் கொண்டு வரமுடியும் என்று நான் நம்புகிறேன் சாமி" என்றார்.

நம்பிக்கை மிகுந்த பதில்! ஓர் இளைஞர் தெளிவாகச் சொல்கிறார். அடிகள் புன்முறுவல் பூத்தவாறு முருகனை சிறிது நேரம் உற்றுக் கவனித்து நோக்கினார்கள்.

இளைஞர் முருகனுக்கான ஞானஸ்நானம் அந்த நிமிடத்தில் நிறைவேறியது! மிக்க மகிழ்ச்சியோடு நின்று கொண்டிருந்த என்னையும் அடிகள் பார்த்தார்கள். அந்தப் பார்வையில் ஆயிரம் அர்த்தங்கள் இருந்தன. அதில் ஒன்று, "நல்ல பதில், நல்ல மாணவன்" என்பதாக நான் உணர்ந்தேன்.

வேளை அல்லாத வேளை; எரிக்கும் வெயில் நேரம்; மின்சாரமும் இல்லை; காலைப்பொழுது தொடங்கி, எதையோ தேடிக் களைத்துப்போன நிலை. எங்களை அடிகள் தவிர்த்திருக்கலாம்.

தவிர்த்தல், பாராது இருத்தல் எனபதெல்லாம் தாயுள்ளத்திற்கு இருக்குமா? எங்களையும் வரவேற்று, உரையாடி, நீறுபூசி, பழங்களைப் பிரசாதமாக வழங்கி அனுப்பிய அந்தப் பேரன்பை, இன்றும் நினைக்கிறேன்; நினைத்து, நினைத்து "அடிகாள்" என்று மனம் உருகி வணக்கம் செலுத்துகிறேன்.



## இயன்மொழி வாழ்த்து

அண்ணா தம்பி அருந்தமிழ்க் காவலன்
மண்ணாள் அமைச்சர்க்கு மாதிரி முதல்வன்
உலகக் கவிஞன் ஒருவன்
கலைஞர் டாக்டர் கருணா நிதியே.

– **ஆ. சிவலிங்கனார்**, மயிலம்

# அருளாலய அருச்சகர்

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி - 9)

ஆட்சியில் மாற்றம் வந்த
அடுத்தசில நாட்க ளுக்குள்
மாட்சியாய்ப் பல்வே றான
மதிப்புறு அறிவிப் புக்கள்
காட்சிபோல் கண்ணை, கருத்தைக்
கவர்ந்திழுப் பதனால், தேர்தல்
சாட்சியாய்ச் சொன்ன தெல்லாம்
சட்டமாய் ஆகு தன்றோ!

அவைகளுள் ஒன்று பற்றி
அகத்திலே எண்ணிப் பார்த்தேன்!
இவையிவை கோயிற் காக
இருந்திட வேண்டு மென்று
சுவையுறு தீர்மா னத்தைச்
சுடச்சுடப் போட்டுப் போட்டு
நவையிலா அந்த நாளில்
நற்றவ அடிகள் தாமும்,

மேலவை தனிலும் மற்றும்
மேதினி மேடை தோறும்
சாலவே பேசி வந்த
சரித்திரச் செய்தி யான
ஆலயந் தன்னில் எவரும்
அருச்சகர் ஆகும் தகுதி
சீலமாய் வேண்டும் என்ற
சிறப்பின்று உயிர்த்த தம்மா!

அனைத்துநல் சாதி யாரும்
அருச்சகர் ஆவர் என்று
கனைத்திட்ட கருத்தைத் தானும்
கருத்துடன் காப்ப தற்குப்
பனைத்துணை முயற்சி வேண்டும்!
பலரிதைக் காலம் பார்த்துத்
தினைத்துணை யளவில் தீட்டும்
திட்டத்தால் கவிழ்க்கப் பார்ப்பார்

கோசாரப் பலனில் லாமல்
கோவிலில் நுழையும் அந்த
ஆசாரம் இல்லா தவர்கள்
ஆண்டவன் கருவ றைக்குள்
பூசாரி யாக நின்று
பூசைகள் செய்தால் நாட்டில்
ஆசாரம் கெடுமென் றேதான்
ஆவெனப் பிளப்பார் வாயை!

வடமொழி தன்னில் தானும்
வழக்கமாய் அருச்சனை செய்யத்
திடமாகத் தெரியா தவர்கள்
தினம்வழி பாடு செய்தால்
கடவுளும் இடம்பெ யர்ந்தே
கண்டஇடம் போவார் என்று,
உடம்படா வாதத் தாலே
உயர்வினைக் கெடுக்கப் பார்ப்பார்!

தமிழிலே அருச்சனை செய்யத்
தமக்குவரா கார ணத்தால்
அமிழ்தான திட்டந் தன்னை
அடியோடே அழிக்க வேண்டிச்
சிமிழுக்குள் விடத்தைப் போலச்
சில்லறை மாந்தர் சில்லோர்
உமிழ்கின்ற பாம்பின் விடமாய்
உரைப்பரிது வேண்டா மென்றே!

அருச்சனை என்று சொன்னால்
அருந்தமிழ் நாட்டில், தமிழில்
அருச்சனை செய்தல் தானே
அறிவுடைமை ஆகும், எனவே
"அருச்சனை தமிழிலும்" என்ற
அறிவிப்பை முதலில் நீக்கி
அருச்சனை தமிழில் என்ற
அசைவிலை நாட்ட வேண்டும்.

வழக்கமாய் செய்து வந்த
வடமொழி அருச்சனை மாற்றி
வழக்கமில்லாத் தமிழில் செய்ய
வாராதே என்ப தாகப்
பழக்கமிலா நிலையைக் கூறிப்
பைந்தமிழ் அருச்ச னைக்குச்
சழக்கினைச் செய்ய எண்ணும்
சதியைமுறி யடிக்க வேண்டும்!

பழகிய பழக்கந் தன்னைப்
பரபரப் பின்றி நாளும்
பழகிய வடமொழி யோடே
பைந்தமிழ் தனையும் கொஞ்சம்
அழகிய வாயால் சொல்லும்
அனுபவம் பெற்று விட்டால்
அழகிய தமிழே முந்தும்!
அருச்சனைத் தமிழும் கொஞ்சும்!

அருத்துதல் என்ற சொல்தான்
அருச்சனை ஆகும், அந்த
அருத்துதல் என்ப தற்கு,
"அன்புடன் ஊட்டல்" பொருள்போல்
அருச்சனை என்றால் ஆன்மா
அகத்துறு விருப்பந் தன்னை
அருச்சனை யாக ஊட்டல்
அதன்விருப்பைக் காட்ட லன்றோ!

இதன்படிப் பார்த்தால் நாட்டில்
இசையுடன் பாடிச் சென்ற
இனியதிரு முறைப்பாட் டெல்லாம்
இதயத்தின் வேண்டுத லாக
இருப்பதால் அவைகள் எல்லாம்
இருப்பான அருச்சனை ஆகும்!
இதுதானே அருச்சனைக் கான
இதமான பொருட்சு ருக்கம்!

ஆலயந் தன்னில் செய்யும்
அருச்சனை யெல்லாம் ஆண்டவன்
சீலமார் பேர்கள் தம்மைச்
சிறப்பாக அடுக்கல் அன்றிக்
கோலமார் வேண்டுத லுக்குக்
கொஞ்சமும் இடமே இல்லை!
சாலவே சிந்திப் போர்க்குச்
சட்டென விளங்குந் தானே!

ஆதலால் அருச்சகர் என்போர்
ஆற்றிடும் பூசை யோடே
ஓதிடும் தமிழ்ப்பாட் டாலே
ஓங்குதமிழ் அருச்சனை தன்னைக்
காதலால் செய்வ தாலே
காலத்தால் கனிந்திட் டோரைச்
சாதித்த அருளா லயத்தார்
சாதனை நபரென் பேனே!

நமது சமயத்தில் சாதி வேறுபாடுகளின்றி அனைவரும் திருக்கோயிலில் வழிபாடு செய்துகொள்ளும் உரிமை இருந்தது. அன்று சிறுமையின் சின்னங்களாகிய எல்லைக் கோடுகள் இருந்ததில்லை. பழங்காலத் திருக்கோயிலில் எல்லோரும் சென்று வழிபாடு செய்து கொள்ளும் உரிமையிருந்தது.

-அருள்நெறித்தந்தை

"நமது நிலையில் சமயம் சமுதாயம்" நூலிலிருந்து

# பெருவாரியான நூல்கள் தேவை!
# வேண்டுகோள்!

வாரி வழங்கும் வள்ளல் பெருமக்களே!
நல்ல தமிழ் வளர்க்கும் தமிழ்ச் சான்றோர்களே!

நம் பேரறிஞர் திருவள்ளுவர் பெயரால் அமைந்த இராசபாளையம் திருவள்ளுவர் மன்றத்தைச் சீரோடும், சிறப்போடும் 40 ஆண்டுகளுக்கு மேலாக நடத்தி வருகின்றோம்.

மன்றத்தின் சார்பில் "வழக்கறிஞர் நல்லகுற்றாலம் நூலகம்" என்ற மிகப் பெரிய நூலகம் ஒன்றும் இயங்கி வருகிறது. நாளிதழ், கிழமை இதழ், திங்களிதழ் என்று 40 இதழ்கள் வந்து கொண்டிருக்கின்றன. 20000 நூல்களைத் தாங்கி நிற்கின்ற இந்த நூலகத்தை ஈடிணையற்ற நூலகமாக - நூறாயிரம் நூல்கள் உள்ள அறிவுத் திருக்கோயிலாக ஆக்கிட எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டு அறிவுப் பணியாற்றி வருகின்றோம்.

"நூல்கள்" - வழிகாட்டிகள் - மிகச் சிறந்த மேதைகளின் கருத்துக்களை வாரி வழங்கி மனிதனைச் செம்மைப்படுத்துவன - சிறுமையினின்றும் - அறியாமையினின்றும் - வறுமையினின்றும் விடுவித்து நல்வாழ்வு வழங்குவன. சுருங்கச் சொன்னால் நூலகமாகிய அறிவாலயங்களே தமிழர் சமுதாயத்தைத் தட்டி எழுப்பும்; கட்டிக் காக்கும்; விழிப்புறச் செய்து எழுச்சியுண்டாக்கி இளைஞர்களைக் காப்பாற்றி நல்வழி காட்டும்.

ஆதலால், நூல்களைப் பெருக்கிட நினைக்கும் எங்கள் முயற்சிக்குத் துணை நிற்பதற்கு உங்கள் ஆதரவை வழங்கிட வேண்டுகிறோம். தங்களிடமுள்ள நூல்களை எங்கள் மன்ற நூலகத்திற்கு வழங்கி உதவிடப் பணிவோடு வேண்டுகின்றோம். நூல்கள் வழங்கிடத் தங்களால் இயன்ற நிதியுதவி வழங்கிட வேண்டுகின்றோம்.

தங்கள் மேலான ஒத்துழைப்பை - உங்கள் உற்றார் உறவுகளிடமும் எடுத்துக்கூறி மன்றப்பணிக்கு ஆதரவு நல்கிட மனமார வேண்டுகின்றோம்.

நூல்களும் நிதியும் விடுக்க வேண்டிய முகவரி :

தலைவர்
**வழக்கறிஞர் நல்ல குற்றாலம் நூலகம்**
திருவள்ளுவர் மன்றம்
141A டி.பி. மில்ஸ் ரோடு,
இராசபாளையம் - 626 117

# பாடம் ஒன்றா?

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

ஞானத்தைப் பெறுவதற்கு நூலை மட்டும்
நம்புவதும் சரிதானா? பரந் திருக்கும்
வானத்தைப் படித்திடுவோம்; அதுபு கட்டும்
வனப்புமிகு பாடங்கள் கோடி! காட்டின்
மோனத்தைக் கலைப்பதுபோல் சதங்கை கட்டி
முடுகிவரும் அருவியிடம் பாடம் கேட்போம்!
தானாகப் பாடுகின்ற சில்வண் டோசைச்
சங்கீதக் குரலுக்கே அர்த்தம் காண்போம்!

அதோஅங்கே ஒரேஒருநாள் சிரித்தே வாழும்
அழகுமலர் கழறுகின்ற பாடம் கேட்போம்!
இதோஎதிரி எனஅறியா மழலைக் கிள்ளை
எழிற்சிரிப்பில் இழையோடும் சுவையைத் துய்ப்போம்!
நிதானமுடன் காத்திருக்கும் அல்லி மட்டும்
நிலவுகண்டே நகைப்பதுமேன்? புதிரை ஆய்வோம்!
உதாரகுணக் கார்முகில்கள் மழைபெய் யாமல்
ஒட்டாரம் செய்வதுமேன்? விடையைக் கேட்போம்!

எழுத்துகளில் மட்டுமிங்கே அறிவைத் தேடி
ஏமாந்தே போகாதீர்! மரத்தி னின்றே
பழுத்தஇலை உதிர்வதனைப் பார்ப்பீர்; வாழ்க்கைப்
பாதையதன் காதையினை உணர்வீர்! மண்ணுள்
புழுத்ததொரு மண்புழுவும் தியாகத் தாலே
புகழ்வாழ்வு பெறுவதுமேன்? அறிவீர்! நாளும்
அழுத்தமுடன் கோளத்தின் அங்க மெல்லாம்
அன்றாடம் புகட்டுகின்ற பாடம் ஒன்றா?

ഗഗഗഗഗ

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# சுந்தரர் வாழ்வியல் உணர்த்தும் தோழமை நெறி

(சொ. அருணன், புதுச்சேரி)

## தோழமைத் தொண்டு

தொண்டு செய்பவரே தொண்டர்! மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்பது சிந்தனை மொழி. தன்னைக் கணப்பொழுதும் மறவாது தோழமை அன்பு காட்டும் மகேசனுக்கு சுந்தரர் என்ன தொண்டு செய்தார்? சேக்கிழார் திருவாக்கினாலே அறியலாம்.

"திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி
கருத்தொன்று காதலினாற் கனக மதில் திருவாரூர்
ஒருத்தர் கழல் முப்பொழுதும் உருகியஅன் பொடுபணிந்து
பெருத்தெழு மெய் அன்பினால் பிரியாதங்கு..."

விளங்கினார் என்று சுந்தரரின் தோழமைத் தொண்டை வியந்து போற்றுகிறார்.

சுந்தரர் சைவத் தொண்டர்களின் செவ்வியல் வாழ்வதனைத் தன் செந்தமிழால் செப்பமுற அமைத்துச் சிறப்பான தொண்டு செய்தார். சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடி விதை இட்டுவைத்தார். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் நிகழ்ந்தது இது. அவ்விதை கி.பி. பத்தாம் நூற்றாண்டில் நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியாகக் கிளை பரப்பிற்று. அது மேலும் வளர்ச்சியுற்று கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழாரால் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணமாக விழுதிறக்கிப் பேராலமரமாக இன்றுவரை செழித்தோங்கி வளர்ந்து வருகிறது. மெய் அன்பால் குறையாதானாக விளங்கிய ஈசர்க்குச் சுந்தரர் செய்த இத்தோழமைத் தொண்டு பொருத்தமானது.

பெற்று மகிழ்தலும், தந்து மகிழ்தலும் நட்பிற்கே உரிய நற்குணம். சுந்தரர் தந்த திருத்தொண்டத் தொகையால் திருவுளம் மகிழ்ந்த தில்லைக் கூத்தர், அதற்கு இணையான பரிசில் ஒன்றை அவருக்குத் தந்தருளச் சிந்திக்கிறார். இன்னொரு கூத்து அரங்கேறுகிறது.

தோழனுக்குத் தொண்டு செய்ய எண்ணிய தம்பிரான் தானே நேர்முகமாய்ச் செய்யாது சுந்தரர்க்குத் தோழனான மற்றொருவர் முகத்தான் அத்தொண்டைச் செய்யச்செய்து தோழமையின் விரிவை இன்னும் சிறக்கச் செய்கிறது.

சுந்தரர்க்கு இறைவன் தோழன், எனில் சுந்தரர்க்கோ சான்றோர் பலரும் தோழர். இதைச் சுந்தரர்க்கு உணர்த்தவே குண்டையூர்ப் பெரியாரை இறைவன் அனுப்பி வைக்கிறார். கொண்டும் கொடுத்தும் அமைதல் தோழமைத் தொண்டு. அஃதேபோல் சுந்தரர்க்கு செந்நெல்லும், செழும்பொன்னாய் செழும் பருப்பும் இன்னபிற தானியங்களும் தந்து மகிழ்ந்தவர் குண்டையூர்ப் பெரியார். அவர் செய்த தோழமைத் தொண்டால் ஈசனின் நாடகத்தில் அவரும் ஓர் பாத்திரமானார். தோழனின் தோழனல்லவா அவர்! இறைவன் திருவிளையாடலால் அத்தொண்டுக்குத் தடையேற்பட்டது. வானம் முறை தவறினால் வாழ்வு முறை தவறாதோ? சுந்தரர்க்குத் தருவதற்கு இயலாமல் குண்டையூர்ப் பெரியார்க்கு ஊனும் உறக்கமும் கொள்ளவில்லை. தன் மானக்குறை என எண்ணி மறுகினார். சொல் தவறியவன் சோறுண்ணல் தகாது என பட்டினி கிடந்து துன்புற்றார். ஈசனின் கருணை விழிகள் அடியவர்தம் துன்பம் துடைக்க மலர்ந்து நின்றன. கனவில் உதித்து "கலங்கற்க! சுந்தரர்க்காய் இருக்கிறது, குன்றளவு நெல்மணிகள்" என்றார். திடுக்கிட்டு விழித்தார் குண்டையூர்ப் பெரியார். கனவு நனவாயிற்று. கண்முன்னே மலைமலையாய் நெற்குவியல். "ஈசன் தந்த பொருளைச் சுந்தரரிடம் சேர்ப்பது எங்ஙனம்? என்னும் மறுகவலை பிறந்தது. .சுந்தரரே சொல்லட்டும்" எனச் சுந்தரரைத் தேடிப் போனார் அப்பெரியார். தம்பிரான் தோழரின் தாயன்பு புலப்பட்டது சுந்தரர்க்கு. இருவரும் நெல்மலையை நாடி வந்தனர். மலை கண்டு மலைத்தார் சுந்தரர்.

இது நெல் மலையா? தோழரின் அன்புளமா? இத்தனை குவியலையும் எங்ஙனம் கொண்டு சேர்ப்பது? அப்போது புரிகிறது சுந்தரர்க்கு! சுந்தரர்க்குச் சேரவேண்டியதை அவர்தம் இல்லத்திலேயே நிரப்பியிருக்கலாமே? அதை விடுத்துக் குண்டையூர்ப் பெரியார் வழி தந்தருளுதல் ஏன்? சுந்தரர் மீது ஈசன் கொண்டுள்ள தோழமைக்கும் மிக்கது குண்டையூர்ப் பெரியாரின் தோழமைப் பண்பு என்பதை

எடுத்துக்காட்டவே நெல்மலை குவிந்திருக்கிறது. சிவனடியார்களின் பெருமையை இதன்மூலம் உணர்த்தவே இந்தக் கூத்தை நடத்துகிறான் எம்பெருமான். நெக்குருகினார் சுந்தரர். பதிகம் பிறக்கிறது. கூடவே, வேண்டுதலும் பிறக்கிறது.

"நீள நினைத்தடியேன் உமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவாள் அவள்வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச் சில நெல்லுப் பெற்றேன்
ஆளிலை எம்பெருமான் அவையட்டித் தரப்பணியே!"

என்ற திருப்பதிகம் பாடினார். கிராமப் பகுதிகளில் சுமை தூக்கிச் செல்பவர்கள் சுமையின் கனத்தைத் தாங்காது தரையில் இறக்கி வைத்து விடுவர். தனியாகத் தூக்க இயலாதபோது யாரேனும் வழிப்போக்கரின் உதவியை எதிர்பார்த்திருப்பர். யாரேனும் தோழர்களே வந்தால் எப்படியிருக்கும்? ஒரு கை தருக! என்பார்கள். அஃதே போலும் இங்கு சுந்தரர் தம் தோழரான இறைவனையே சுமக்க அழைக்கிறார். இறைவனும் உடனே இசைந்து பகற்பொழுது மறையட்டும். ஆரூர் வீதி நிறையும்படி கொண்டு சேர்த்துவிடுவோம்? என்கிறார். என்னே தோழமைத் தொண்டு! அதிகாலைப் போதில் இறைவனது கருணையை ஏற்க உள்ளத்தாலேயே இயலாதபோது இல்லம் போதாதநிலையில், - ஆரூர்த் தெருக்கள் நெற்பரப்பாயிற்று! வேறு வழி தோன்றவில்லை சுந்தரர்க்கு. பரவையாரோ, "பகுப்பீர், அவரவர் இல்முன் இருப்தெல்லாம்" என முரசறைந்து மகிழச் செய்தார். ஆக எல்லார்க்கும் ஆகும் என்று கருதியே ஈந்தாலும் தோழர்கள்தம் மாண்பினையும், அவர் தொண்டுச் சிறப்பினையும் உவகறியச் செய்ய வேண்டும் என்பதை உணர்த்த நிகழ்ந்த இத்திருவிளையாடல் தோழமைத் தொண்டுக்கொரு சிறந்த சான்றாகும்.

(தொடரும்)

ஒருவன் தன்னுடைய சமயத்தைப் பற்றி உணர்த்திப் பேசவும் அந்தச் சமயத்தில் நின்றொழுகவும் உரிமை உண்டு. ஆனால், மற்ற மதங்களை ஒப்பு நோக்கியும் தாழ்த்தியும் பேசுவது தவிர்க்கப்படுதல் வேண்டும்.

-அருள்நெறித்தந்தை



# சிந்தனை வட்டம்

டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாறு படித்தார், வரலாறு படைத்தார், வரலாறாகவே மாறிவிட்டார் என்ற உண்மையை ஒரு வரலாற்றின் வரலாறு என்ற கட்டுரையால் இங்கிதமாகப் புலப்படுத்தியதிறன் கட்டுரையாளரையே சாரும்.

தந்தையின் நூற்றாண்டைத் தனையர் வெளிப்படுத்திய நுட்பம் மிக அருமை.

இராசமாணிக்கனார் தம் எட்டுக் குழந்தைகளில் எழுவரைத் தமிழ்க் கல்வியில் தேர்ச்சிபெறச் செய்ததாகக்குறிப்பிட்ட ஆதங்கத்தில் "கண் மருத்துவராகப் பணிபுரியும் ஒருவர் நீங்கலாக" என்றது டாக்டர் இரா. கலைக் கோவனாரை என்பதுதான் கன்றும் கனி உதவும் என்பதை மெய்ப்பிக்கின்றது.

திருச்சித் தில்லை நகரில் உள்ள இராசமாணிக்கனார் வரலாற்று ஆய்வு மையத்தின் மூலம் வெளிக்கொணரும் தமிழ்க்கல்வெட்டுச் செய்திகள் "இராச - மாணிக்கங்கள்" - அல்லவா.

வாழ்க! மா. இரா. நூற்றாண்டு!

வளர்க! வழி வழி! கலைக்கோத் தொண்டு?

-தமிழாகரர் **தெ. முருகசாமி**, புதுச்சேரி

நம்மவர் செய்யும் பொருட்களை நாம் பயன்படுத்தி நம்மவரைக் காக்கும் நற்பணியைத் தொடர்வது நல்லது எனக்காட்டும் ஆசியுரை நல்வழி காட்டுகின்றது.

சோம்பலை உதறித்தள்ளி, தன் தேவைகளைத் தானே பூர்த்திசெய்து கொள்ள உழைப்பதின் அவசியத்தை உணர்த்தும் "மடியின்மை" அதிகாரத்தின் உரை மிகவும் பயனுள்ளது.

வரலாறு பற்றி ஆய்ந்து வரலாறு படைத்திருக்கும் அறிஞர் இராசமாணிக்கனாரின் வரலாறு முயற்சியும், உழைப்பும் இருந்தால் தடைகளைத் தாண்டி வளரமுடியும் என்றுணர்த்துகின்றது.

தமிழாகரரின் கம்பராமாயண விளக்கம் புதியனவற்றைப் புரிய வைக்கின்றது. துணைவேந்தரின் உரை பலவற்றைத் தொடுகின்றது. ஆழ்ந்து நோக்கினால் தான் உண்மை தெரியவரும். மேலோட்டமாய்ப் பார்த்தால் நம் மனம் தான் தெரிய வரும். பாடம் சொல்லி வாழ்ந்த புலவர்களுக்கும் அரசர்கள் மான்யங்கள் வழங்கியுள்ளனர். படித்தால் பிழைக்க முடியாது என்ற நிலையிருந்த காலத்தில் பலரும் படிப்பதைத் தவிர்த்துவிட்டுப் பணியில் இறங்கியுள்ளனர். அவர்களுக்குப் படிப்பு என்பது தேவைப்படவில்லை. "ஆணவ இயல்பு" கட்டுரை அருமை. சாதாரண நிகழ்ச்சி ஏற்படுத்திய விருத்தி - அழகான - சாத்திர விளக்கமாக அமைந்துள்ளது. பெரியவர்கள் பெரியவர்கள்தான்.

-**மு. விஸ்வநாதன்**, ஆதம்பாக்கம், சென்னை.



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

***மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.***

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!






**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

பதிவு எண் : TN/SP/KKD-01/2006-2008
மக்கள் சிந்தனை சூன் / 2006. வெளியீட்டு நாள் 20-06-2006



பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி) அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166